# உரையாசிரியர், பதிப்பாளர் இவர்களின்

## முடிவுரை

"தகப்பன்சாமி என்வரு பெருமாளே! - புவிதனில் எனக்குண்டாகு பணிவிடை கணக்குண்டாதல் திருவுளம் அறியாதோ" என்னும் பிரார்த்தனையுடன் **"முருகவேள் பன்னிரு திருமுறை"** என்ற தலைப்புடன் உரை எழுதத் தொடங்கி *1952*-ஆம் ஆண்டு வைகாசி விசாகத்தில் அச்சுக்குக் கொடுக்கப்பட்ட இந் நூல், முருகவேளின் திருவருளாலே *1957*-ஆம் ஆண்டு பங்குனி உத்திரத்தில் நிறைவேறப் பெற்றது. பாடல்களுக்கு எழுதப்பட்ட உரையிலும், அச்சேறிய வகையிலும் குறைபாடுகள் இருப்பின், ஆன்றோர் அவைதமைப் பொறுத்துக் குணமேதேனும் இருப்பின் அதனையே கொள்ளுமாறு வேண்டப்படுகின்றனர்.

இந்த ஆறாவது தொகுதியின் சுமார் ஆயிரம் பக்கத்து அச்சு வேலை பெரும்பாலும், நல்ல திறமையும் அடக்கமும் நற்பக்தியும் வாய்ந்த இளைஞர் சிரஞ்சீவி கு.து. சுவாமிநாதன் என்பவரால் சீரான வகையில் செய்யப்பட்டு நிறைவுற்றது. அவ்விளைஞருக்கு எங்களது ஆசியும், நன்றியும் உரித்தாகுக. முருகவேளின் திருவருள் பெருகுவதாக.

ஐந்துவருட காலம் இடையூறு ஏதுமின்றி இவ்வேலையைச் செவ்வனே நடப்பித்து முற்றுவித்த எமதாண்டவர் திருத்தணிகேசரின் திருவருளை வியந்து அவருடைய பொன்னார் திருவடிளைப் போற்றுவதன்றி வேறு எவ்வண்ணம் எங்கள் நன்றியை நாங்கள் அவருக்குக் காட்டவல்லோம்.

"ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும் - மாதேவா
நின்செயலே என்று நினதருளா லேயுணரில்
என்செயலே காண்கிலே னே' - சிவபோகசாரம் 45.

என்னும் திருவாக்கின் உண்மையைக் கண்கூடாக இங்கே காண்கின்றோம்.

சென்னை,
**16-3-1957.**

வ.சு. செங்கல்வராயன்
மீனாக்ஷி கலியாணசுந்தரம்.

வாழ்க முருகவேள், தேவியர், வேல், மயில்
வாழ்க சேவலும் வீரரொன் பதின்மரும்
வாழ்க முருகவேள் பன்னிரு திருமுறை
வாழ்க முருகவேள் அடியவர் நாளுமே.

வேலு மயிலுந் துணை.